# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 2 — 1-6-83 இசைக்கலை உலகத் தமிழ் மாதமிருமுறை — இதழ் 3/4


### இராமலிங்கர் பணி மன்றம் நடத்திய

## இசைக் கலை விழா !



பொள்ளாச்சி நா. மகாலிங்கம்

ஆண்டு தோறும் சென்னையில் வள்ளலாருக்கு பெரும் விழா நடத்தும் இராமலிங்கர் பணி மன்றம் கடந்த 5 ஆண்டுகளாக தமிழிசை வளர்ச்சிக்காக இசைக் கலை விழாவும் நடத்தி வருகின்றனர். இவ்வாண்டு கடந்த 24-5-83 முதல் 31-5-83 வரை சென்னை ஜெமினி ராணி சீதை மன்றத்தில் இவ்விழாவினை நடத்தினர். இதனை ராஜா சர் அண்ணாமலை செட்டியார் நினைவு அறக் கட்டளையும் இணைந்து நடத்தியது.

இசை விழாவின் தமிழிசைக் காவலர் டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார், சட்ட மன்ற பேரவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு இராம வீரப்பன், குமரி அனந்தன் கலந்து உரையாற்றி சிறப்பித்தனர்.

விழா நிகழ்ச்சிகளில் ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. மு. அருணாசலம், பேராசிரியர்கள் பால கிருஷ்ணன், திரு. வேணு கோபாலன், நீதிபதி மோகன், செய்தி மக்கள் தொடர்பு துறை இயக்குநர் திரு S.T காசிராஜன் பொன். பரமகுரு I.P.S. டாக்டர் S. இராமநாதன் திருமதி அபயாம்பிகா முரளிகிருஷ்ணா, இராசிராஜ் முதலியவர்கள் சிறப்புரையாற்றினர், விழா முதல் 4 நாட்களில் காலையில் திரு. கிரிதாரிபிரசாத் அவர்களின் கீதைப் பேருரையும், மற்ற 4 நாட்களில் காலையில் உள் துறைச் செயலாளர் திரு. T.V. வெங்கட்ராமன் அவர்களின் திருமந்திர விளக்க உரையும் நடைபெற்றன.

ஒவ்வொரு நாளும் பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்தரேசனார் சீடர் பேராசிரியர் மா. வயித்தியலிங்கம் தமிழிசை மரபு பற்றி விரிவுரையாற்றினர் தினசரி இசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன சேலம் டாக்டர் S. ஜெயலட்சுமி T. K. S. கலைவாணன்' மற்றும் பலர் பாடினர்

நிறைவு நாளன்று செல்வி உமா தண்டாயுதபாணியின் சுரவந்திகா குழுவினரின் திருஅருட்பா நாட்டியம், தொடர்ந்து சேவா ஸ்டேஜ் சத்தியதரிசனம் நாடகம் நடைபெற்றன. செயலாளர் திரு பகீர்கன் நன்றியுரையுடன் விழா முடிவுற்றது,

இராமலிங்கர் பணிமன்ற தலைவர் வள்ளல் பொள்ளாச்சி திரு. நா மகாலிங்கம் விழா ஏற்பாடுகளைச் செய்திருந்தார் தமிழிசைக்காக நல்லதொரு விழாவினை நடத்தும் பொள்ளாச்சியாருக்கும் இராமலிங்கர் பணி மன்றத்திற்கும் 'இயலிசை" தமிழர்கள் தமிழ் கலைஞர்கள் சார்பில் நன்றி தெரிவித்து கொள்கின்றது. எனினும் சில கருத்துக்களை உரிமையுடன் எடுத்துக் கூற இயலிசை கடமைபட்டுள்ளது,

இராமலிங்கர் பணி மன்றம் நடத்தும் மற்ற சமய இலக்கிய விழாக்களைப் போலவேதான் இதனையும் அமைத்துள்ளனர். ஏதோ அவர்களுக்கு வேண்டிய சில இசைக்கலைஞர்கள் பெரும்பாலும் பெண் பாடகியர்-இவர்கள் நிகழ்ச்சிகளை மட்டும் சேர்த்து இசைகலைவிழா எனப் பெயர் சூட்டி விட்டனர்.

சமீபத்தில் தஞ்சை மாவட்டத்தில் மங்கை நல்லூரில் உள்ள சமரச சுத்த சன் மார்க்கத்தினர் இராமலிங்கர் விழா நடத்திய போது தமிழகத்தில் அருட்பாவினை நல்ல முறையில் ஈடுபாடுடன் பாடிவரும் இசை வாணர்களை அமைத்து பாடவைத்து சிறப்பித்து அனுப்பினர். சென்னை தமிழிசைச் சங்கம் நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஓதுவா மூர்த்திகளை வைத்து தமிழிசை ஆராய்ச்சி தமிழிசையரங்கு நடத்தி தமிழிசைக்கு பெருமை சேர்க்கின்றது. இன்னும் ஏராள இசைக் கலைஞர்கள் தமிழ் பாடல்கள் மட்டுமே பாடி தமிழகத்தை பவனி வருகின்றார்கள். இவர்களையெல்லாம் இராமலிங்கர் பணி மன்றம் பயன்படுத்திக் கொண்டு இசைக் கலை விழாவினை நடத்தினால் தமிழிசைக்கு செய்யும் அவர்கள் தொண்டு சிறப்பாக இருக்கும்.

வாழ்க இராமலிங்கர் பணி மன்றம்! வளர்க அவர்கள் தொண்டு!

## நாமகிரி பேட்டையாருக்கு கனடாவில் பட்டம் !

நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் அவர்கள் தனது குழுவினருடன் கனடா, அமெரிக்கா மற்றும் சில மேலைநாடுகளில் நாதசுர இசை நிகழ்ச்சிகள் நடத்த சென்றுள்ளார், அவருக்கு கனடா நாட்டில் டோரண்டோ நகரில் உள்ள பாரதி கலை மன்றம் 'நாதசுர இசை பேரரசர்' என்ற பட்டத்தை அளித்தனர்! அமெரிக்க நகரான பிட்ஸ்பாக் ஏழுமலையான் கோவிலில் அவருக்கு பொன்னாடை போர்த்தினர். மற்றும் அவர் அந்த நாட்டில் மாண்ட்ரியல், ஆட்டோவா, வாஷிங்டன், லாஸ் ஏஞ்சல்சு, சான்பிரான்சிஸ்கோ, நியூயார்க் ஆகிய ஊர்களில் கச்சேரிகள் செய்தார். திரும்பும் வழியில் இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி முதலிய நாடுகளில் கச்சேரி செய்து இம்மாத இறுதியில் இந்தியா திரும்புவார்.

## வடபழநி வைகாசி விசாக கலை விழா !

சென்னை வடபழநியாண்டவர் திருக்கோவில் வைகாசிப் பெருவிழாவின் விடாயாற்றி கலை விழா 27-5-83 முதல் 5-6-83 வரை நடைபெறுகின்றது.

முறையே திருவாளர்கள் T. L. மகராசன், K. B. S. கமலா, M. R. விஜயா, வீரமணி ராதா, ராசகோபால் சாஸ்திரிகள், (இசைச் சொற்பொழிவு) மதுரை S. சோமசுந்தரம், சூலமங்கலம் சகோதரிகள், குன்னக்குடி வைத்தியநாதன் பிடில், சீர்காழி S. கோவிந்தராசன், S. G. சிவ சிதம்பரம், T.K.S. கலைவாணன் குழுவினர்கள் இசை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன தினசரி ஏராள ரசிகர்கள் வந்து கலைஞர்களை சிறப்பிக்கின்றனர்,

### குடியாத்தம் புஷ்ப பல்லக்கு விழா

## ராகரஞ்சினி குழுவினர் இன்னிசை

வட ஆற்காடு மாவட்டம் குடியாத்தத்தில் அருள்மிகு கெங்கையம்மன் ஆலய புஷ்ப பல்லக்கு திருவிழா 17-5-83 அன்று நடைபெற்றது இதனையொட்டி குடியாத்தம் சுண்ணாம்புபேட்டை இளைஞர்கள் திரு C. S. J காளிதாஸ் அவர்களின் ராகரஞ்சனி இசை பறவைகளின் திரைப்பட இன்னிசை நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தனர் நிகழ்ச்சிக்கு திருவலம் ஜான் D.S.P. திரு K.R சுந்தரம் M.L.A ஆகியோர் வந்திருந்து சிறப்பித்தனர்.



மணிவிழா காணும் மன்னவன்—எம்
'முத்தமிழ்ப் பேரவை' முன்னவன் வாழ்கவே!

—'முத்தமிழ்ப் பேரவை'யினர்.

கலைத் தொடர் கதை

# அழகுச் சிகரம்

## 6. புன்னகையும் பொன்னகையும்,

காதலர்க்குள் ஊடலும் கூடலும் பல வகையில் நிகழும் பெண்களுக்கு ஆண்கள் தனக்காக காத்து ஏங்கி நிற்க வேண்டும் என்ற ஓர் அற்ப ஆவல் ....அதே நேரத்தில் அந்த கோபத்தில் காதலன் பாராமுகமாக இருந்து விட்டாலும் இவள் மனம் தாளாது. ஏதேனும் அவனுக்கு பிடித்த சரசத்தைக் காட்டி ஊடலை முடித்து விடுவாள். இது பெண்களுக்கு— அதிலும் பருவ பெண்களுக்கு கை வந்த கலை.

அபிராமி தன்னைக் காக்க வைத்துவிட்டாளே என்று இளையராசாவுக்கு கோபம். அந்த கோபத்தில் அபிராமி தனது மாளிகைக்கு வந்தும் வரவேற்க அவர் கீழே வரவில்லை. இதனை உணர்ந்து கொண்டாள் அபிராமி ஒரு புறம் ஓர் அரச குமாரன் தனக்காக காத்து நிற்கின்றான் என்ற பெருமிதம் இருப்பினும் மறுபுறம் தன் மீதும் தவறு உள்ளது என நினைத்தாள் எப்படியும் அவரை கீழே வரவழைத்து விட வேண்டும் என திட்டமிட்டாள் திடீர் நடனம் ஆடினாள். தன்மீது கோபம் இருந்தாலும் தனது நடனம்மீது அவருக்குள்ள ஆர்வம் அறிவாள். அவரும் சலங்கை ஒலி கேட்டு கீழே வந்தார். அவளது அலங்காரம், நடன விருந்து அவருக்கு அத்தனையும் மறக்க வைத்தது.

'சிம்ம நந்தனம் முடிந்து சிம்மம் பூர்த்தியாவதற்கும் அவர் கூடத்தை முன்னே வருவதற்கும் சரியாக இருந்தது இதுவரை அவர் அபிராமியோ வேறு எந்த நடன மாதோ ஆடி பாராத நடனம் அது அபிராமி இந்த தனிப்பெரும் நடனத்தை தன் எதிரில்—தனக்காக நடனமாடி அரங்கேற்றம் செய்துள்ளாள் என எண்ணி அவரடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை.

அபிராமி ஆடி முடித்ததும் இளையராசாவை கை கூப்பி வரவேற்று 'நமஸ்காரம் என்றாள், அவள் முகத்திலே குறும்புப் புன்னகை. அதன் அர்த்தம் இளையராசாவுக்கு புரியும் என்றாலும் அவர் அதனை கவனியாதவாறு சட்டென்று தனது கழுத்தில் இருந்த தங்கமாலை ஒன்றினைக் கழட்டி அபிராமி கழுத்தில் அணிவித்தார். இதனைக் கண்டு அனைவரும் மகிழ்ந்து கை தட்டினார்கள், அந்த கரவொலி அடங்குவதற்கு முன்னே நட்டுவனார் கணபதி பிள்ளை கைகளைப்பற்றி இளையராசா அவர் விரலில் மோதிரம் ஒன்றை அணிவித்தார். கரவொலி மீண்டும் எழும்பி அடங்கியது.

இளையராசா அனைவரையும் பார்த்து "எங்கள் மாளிகைக்கு வந்து எங்களைச் சிறப்பித்த வித்வான்கள் அனைவருக்கும் நன்றியுடையவர்களாகின்றோம் இந்த மாளிகைக் கூடத்தில் செல்வி அபிராமி சுந்தரி சிம்ம நந்தனம் நடனத்தை அரங்கேற்றம், செய்தது எங்களுக்கும் கிடைத்த பாக்கியம் அதற்கு யாம் குருநாதருக்கும், மாணவிக்கும் பரிசுகள் வழங்கியுள்ளோம் ஏற்று எம்மை கௌரவிக்க வேண்டுகின்றோம். இந்த அரங்கேற்றம் பற்றி எனக்கு முன்னதாகத் தெரிவித்திருந்தால் எமது சமஸ்தானத்தில் மகாராசா சந்நிதானத்தில் நடத்தியிருப்பேன் என்றார். அக்காலத்திலும் அரச பரம்பரையினர் கலையார்வம் உள்ளவர்களாகவும், கலைஞர்களை ஆதரிப்பதனை பெருமையாக நினைப்பவர்களாகவும் இருந்தனர். சமஸ்தானங்கள் கலவரம், சண்டைகள் இல்லாது ஆங்கிலேயர்களின் ஒரு குடைக்கு கீழ் உட்பட்டு அமைதியாக ஆட்சி நடந்து கொண்டிருந்த காலம்.

கணபதி பிள்ளை இளையராசாவுக்கு தனது நன்றியினைத் தெரிவித்து மற்ற கலைஞர்களை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். பஞ்சாட்சர பாகவதர் தமது சமஸ்தானத்திற்கு வந்து கதா காலட்சேபம் செய்துபோன விவரத்தை இளையராசாவே தெரிவித்தார். பாகவதருக்கு மகிழ்ச்சி பொங்க மகாராசாவுக்கு எனது நமஸ்காரத்தைச் சொல்லுங்க, என்றார் இளையராசா சிரித்துக் கொண்டார்.

பின்னர் கணபதி பிள்ளை பக்கம் திரும்பி 'நாம் மேலே போகலாமா என்று கேட்டார். பிள்ளை சிரித்து கொண்டு குழந்தை ஆடி களைப்பாக இருக்கு அதை கூப்பிடுங்க என்று அபிராமியை காட்டினார்.

இளையராசா, 'குழந்தைக்காக தான் நாமே இதுவரை சாப்பிடாமல் இருந்தோம் என்றார்" சற்று வேடிக்கையாகக் கூறினார், அபிராமிக்கு தன்னைக் குழந்தை என்று இருவரும் வேடிக்கையாக பேசுவது பிடிக்கவில்லை.

"நான் குழந்தை தானே எனக்கு ஏன் தங்கமாலை? என்று கூறி இளையராசா, அணிவித்த மாலையை கழற்ற போனாள் அதற்குள் இளையராசா, அபிராமி சுந்தரி உள்ளத்தில்தான் குழந்தை உருவத்தில் ரதிக்கும் ரம்பைக்கும் போட்டிதான் என்று இனிக்க பேசி பேச்சை மாற்றினார் அந்த புகழ்ச்சி அபிராமிக்கு இனித்து கலகல என சிரிப்பை உண்டாக்கியது அவள் கன்னத்தில் விழுந்த குழியும் முத்துப்பல் வரிசை தரிசனமும் அனைவரையும் இளையராசாவின் வார்த்தைகள் உண்மைதான் என்று ஒப்புக்கொள்ள செய்தன.

இளையராசா நட்டுவனாரையும் அபிராமியையும் மங்களத்தையும் அழைத்துகொண்டு மாடிக்கு சென்றார் அபிராமிக்கு கொடுக்கும் மரியாதை அனைத்தும் கணபதி பிள்ளைக்கும் அனைவரும் கொடுத்தனர்.

கச்சேரிகளுக்கு செல்லும் இடமெல்லாம் அபிராமிக்கு தாததாதான் துணை குத்தாலம் கணபதி பிள்ளையும் பொறுப்பானவர்— பொல்லாதவர் அவரை பற்றி அரசபுரசலாக கதை ஒன்று உண்டு இவர் இளம்பிராயத்தில் சதுர்கச்சேரிக்கு ஒரு மாணவியோடு ஒரு ஜமீன்தார் ஊருக்கு சென்றிருந்தார் ஜமீன்தார் பலே ஆசாமி அவர் வருடாவருடம் சின்ன மேளத்திற்கு புது இளம் பெண்களை ஏராள சன்மானம் கொடுத்து அழைத்து அவர்கள் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் அவர்களை தன் ஜாகையில் தங்கவைத்து தனது விருப்பத்தை முடித்தே அனுப்புவார் விவரம் தெரியாமல் சென்ற பெண்களும் அந்த ஜமீனிலிருந்து தப்பிவருவது மிகவும் கடினம் அந்த பெண்களும் வெளியில் எதனையும் சொல்லி எவரிடமும்முறையிடுவதும் முடியாது காரணம் தேவதாசி குல பெண்கள்தானே அவர்கள் முறையிடு அன்றுள்ள சமுதாய அமைப்பில் எடுபடாது.

கணபதி பிள்ளைக்கு ஜமீன் ஊருக்கு செல்லுமுன் கொஞ்சம் சந்தேகம் வந்தது ஜமீன்தாரும் வந்திருக்கும் நட்டுவனார் கண்டிப்பான பேர்வழி என தெரிந்து கொண்டார் எனவே இரவு கச்சேரி முடிந்ததும் இரவு ரயில் வண்டிக்கே நட்டுவனார் மற்றும் இசைக் குழுவினரை கட்டாயப் படுத்தி ஏற்றிவிட்டார் ஏதோ சாக்கு சொல்லி நடனமாட வந்த பெண்ணையும் அவளது அம்மாவையும் மறுநாள் சகலமரியாதையோடு அனுப்பி வைப்பதாக சொல்லி நிறுத்தி கொண்டார் இதனால் அவரது சந்தேகம் மேலும் வலுத்தது.

ரயிலில் ஏற்ற வந்த ஜமீன் வேலைக்காரர்கள் ரயில் கிளம்பியதும் திரும்பினர் ரயில் கிளம்பி சிறிது தூரம் சென்று கைகாட்டி மர சைகைக்காக நின்றது உடனே சட்டென்று ரயிலை விட்டு கணபதிபிள்ளை மட்டும் இறங்கி மற்றவர்களை ஊருக்கு செல்ல உத்தரவிட்டு விடுவிடுவென்று இருட்டில் ஜமீன் மாளிகைக்கு நடந்து யாரும் பார்க்காத நேரத்தில் மாளிகை பின்புறமாக உள்ளே புகுந்து தன் மாணவி ஜாகையில் ஒளிந்துகொண்டார்.

ஜமீன்தார் நடனப் பெண்மணி அம்மாவையும் வேறு இடத்தில் தங்கவைத்து விட்டு எப்படியோ நடன மணியை மட்டும் இங்கு கடத்தி வந்திருந்தார்.

சிறிது நேரம் கழித்து ஜமீன்தார் ஜாகைக்குவந்து ஒன்றும் அறியாத அந்த இளம்பெண்ணிடம் தகாத முறையில் நடக்க

(தொடர்ச்சி 3-ம் பக்கம்)

<u>அறிமுகப் பகுதி</u>



## மெல்லிசைப் பாடகர் டாக்டர் மகாலிங்கம்!

கோமாதா புரொடக்சன்ஸ் தயாரிக்கும் அனல் தீபமாகிறது என்ற படத்தில் நடிகராக அறிமுகமாகி "ஏழுபருவங்களில் வைகை என்ற 'பாடங்களில், நடித்து வருபவர் டாக்டர் S. மகாலிங்கம் இவர் தற்பொழுது தனது இனிய குரலால் மெல்லிசை நிகழ்ச்சிகளிலும் பாடி வரவேற்பு பெற்றுள்ளார் விரைவில் திரைப் படங்களிலும் பாட உள்ளார். லண்டன் வரை சென்று உயர் மருத்துவ படிப்பும் பெற்றுள்ள இவர் விளையாட்டு வீருமாவார். காரைக் குடி கண்டெடுத்த தமிழர்.

இவரை திரை உலகுக்கு அறிமுகப் படுத்திய டைரக்டர் லட்சுமிகாந்த் தயாரிக்கும் படமே அனல் தீபமாகிறது.

## ஆன்மீக மாநாட்டில் ஓதுவாருக்கு பாராட்டு!

செங்கை மாவட்டம் மேல் மருவத்தூரிலுள்ள ஆதிபராசக்தி கல்வி மருத்துவ பண்பாட்டு அறநிலை (மகளிர் பிரிவு) கடந்த மே 13-14-15 தேதிகளில் சென்னை தேனும் பேட்டையில் தங்கள் நான்காவது ஆன்மீக மாநாட்டினை சக்தி உபாசகர் தவத்திரு பங்காரு அடிகளார் முன்னிலையில் நடத்தினர் மாநாட்டில் ஏராள சமய இலக்கியப் பெரியார்கள் கலந்து கொண்டனர் இசை நிகழ்ச்சிகளும். நடைபெற்றன. திருமுருக கிருபானந்த வாரியார் வடபழநி ஓதுவார் திரு N. ஆறுமுகம் இவர்கள் பாராட்டப் பட்டனர் வடபழநி N. ஆறுமுகம் இவ்வாண்டு கலைமாமணி, பட்டத்தை தமிழக அரசில் பெற்றவர். இவரைப் பாராட்டி திருக்கழுக்குன்றத்திலும் வடபழநியிலும் பாராட்டு விழாக்கள் சமீபத்தில் நடைபெற்றன.



### குன்னக்குடி பாலா பாடிய

## முருகன் காவடிப் பாடல்கள் AVM இசைச்சுட்டி வெளியீடு!

கடந்த 7-5-83 அன்று சென்னை மயிலை கபாலீசுவரர் திருக்கோவிலில் திருமதி குன்னக்குடி பாலா பாடிய முருகன் காவடிப் பாடல்கள் இசைச்சுட்டியினை (கசெட்) A.V.M. மியூசிக் சர்விசு நிறுவனம் வெளியிட்டனர். விழாவிற்கு தமிழ்நாடு மேலவைத் தலைவர் திரு ம.பொ. சிவஞானம் தலைமை தாங்கி இசைச்சுட்டியை வெளியிட திருமதி D.K. பட்டம்மாள் முதல் இசைச்சுட்டியை பெற்றனர். ஆலய தக்கார் திரு T.N. குப்புசாமி முதலியார், சூலமங்கலம் சகோதரிகள். திருக்கோயில் செயல் அலுவலர்கள் சங்கத் தலைவர் சுவாமி வெங்கடாசலம் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

திருமதி குன்னக்குடி பாலா அவர்களின் தந்தையார் குன்னக்குடி வெங்கட்ராமன் அவர்கள் காவடி சிந்து பாடல்களைத் தொகுத்து புத்தகமாக வெளியிட்டவர்,

## குரு ராமலிங்கம் இலங்கை பயணம்!



இசைக் கலைஞர் கீரனூர் குரு ராமலிங்கம் பெரும் இசைப் பரம்பரையில் வந்தவர் இவர் தனது மகள் பாடகி செல்வி வான்மதியுடன் தமிழகம் முழுவதும் இசைநிகழ்ச்சிகள் நடத்தி வருகின்றார் ஒரு முறை இலங்கையும் சென்று வந்துள்ளார் தற்பொழுது மீண்டும் வான்மதியுடன் இலங்கை சென்றுள்ளார் ஈழத்திலும் கொழும்புவிலும் இசை நிகழ்ச்சிகள் நடத்தி விரைவில் இந்தியா திரும்புவார்.

## புல்லாங்குழல் ரமணியார் மகள் திருமணம்

புல்லாங்குழல் மேதை டாக்டர் N. ரமணியின் மகள் செல்வி லதாவிற்கும் செல்வன் முரளிதரனுக்கும் 29-5-83 அன்று சென்னை மயிலையில் திருமணம் நடைபெற்றது இசைக்கலைஞர்கள் அன்பர்கள் ஏராளமாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர் திருமணத்திற்கு திருவாரூர் T.S லட்சப்பா, நாதசுர இசையும் திருச்சி A.K.C. நடராசன் கிளாரினெட் இசையும் வழங்கினர் முதல் நாள் வீணை சிட்டிபாபு இசை நிகழ்ச்சியும் திருமண வரவேற்பில் எம்பார் விஜய ராகவாச்சாரியார் இசை சொற்பொழிவு தஞ்சாவூர் M. தியாகராசன் இசை நிகழ்ச்சியும் நடைபெற்றன செல்வி லதாவிற்கும்— புல்லாங்குழல் கலைஞர் வீட்டில் மாப்பிள்ளையான 'முரளி'தரனுக்கும் எங்கள் வாழ்த்து!

### தவில் நாதசுரத் தயாரிப்பாளர்களுக்கு பாராட்டு!

## அனுமன்பள்ளி ஸ்ரீ ராமநவமி விழா!



பெரியார் மாவட்டம் அனுமன் பள்ளியில் உள்ள ஸ்ரீராம பக்த பஜனை கோஷ்டியார் தங்கள் 63-ம் ஆண்டு ஸ்ரீ ராமநவமி விழாவினை சென்ற மாதம் சிறப்பாக நடத்தினர் திருவீதி உலாவில் பத்தமடை M. ராஜா திருமங்கலம் S.V. மீனாட்சிசுந்தரம் இவர்கள் நாதசுரம் சேரிக்கு மன்னார்குடி M.N. ராசகோபாலன் வலையப்பட்டி A.R. சுப்ரமணியம் கொங்கம்பட்டு A.V. முருகையன் ஆகியோர்கள் தவில்கள் வாசித்தனர் முன்னதாக விழாவில் வலைய பட்டி சுப்ரமணியம் அவர்களுக்கும், தவில்கட்டை தயாரிப்பாளர் திருவாவடுதுறை T. சொக்கலிங்க ஆச்சாரி, நாதஸ்ரம் தயாரிப்பாளர் திருவாவடுதுறை N.G.N ரெங்கநாத ஆச்சாரி, நாதசுர சீவாளி தயாரிப்பாளர் திருவாவடுதுறை S. நடராசசுந்தரம்பிள்ளை இவர்களுக்கும் பாராட்டுவிழா நடத்தினர். விழாவிற்கு அனுமன் பள்ளி ஊராட்சி மன்ற தலைவர் K.N. சின்னுசாமி தலைமை வகிக்க சேலம் Dr. S. பாலகிருஷ்ணன் பொன்னாடை போர்த்தினார். பலரும் பாராட்டுரை வழங்கினர் நாதசுரக் கலைஞர் திருவிழா R. ஜெயசங்கர் ராமநாதபுரம் K.R சுப்ரமணியம் தவில் கலைஞர் தத்தமங்கலம் T. பொன்னுசாமிபிள்ளை ஆகியோர் வந்திருந்து சிறப்பித்தனர்,

இசைக் கருவிகள் தயாரிப்பவர்களை வாழ்த்தி விழா நடத்திய அனுமன் பள்ளி ரசிகர்களுக்கு நாம வாழ்த்து தெரிவிக்கின்றோம்!

* * *

அனுமன் பள்ளி ஸ்ரீராமநவமி விழாவில் பாராட்டு பெற்ற நாதசுர சீவாளி தயாரிப்பாளர் திருவாவடுதுறை S நடராச சுந்தரம் அவர்களுக்கு நாதசுரக் கலைஞர் ஆண்டாங்கோவில் A.V. செல்வரத்னம் வழங்கிய வாழ்த்துப்பா!

கொருக்காத் தட்டையினை<br>
  சுருக்கியே செப்பனிட்டு<br>
நாதஸ்வர சீவாளிகள்<br>
  நறுக்காக வழங்கும்—திரு<br>
நடராஜ சுந்தரனார்<br>
  நலமுடன் வாழ்க! வாழ்க<br>
நாதஸ்வர ரூபம்<br>
  நமச்சிவாயமூர்த்தியின்<br>
நன்னருள் பெற்று<br>
  வாழ்க!

அறம் பொருள் இன்பம் எனும்<br>
  முப்பாலின் வள்ளுவம் போல்<br>
தாரஸ்தாய் மந்திரஸ்தாய்<br>
  மத்திமஸ்தாய் மூன்றிலும்<br>
உணர்வுடன் சஞ்சரிக்க<br>
  ஜீவ ஒலி வழங்கிவரும்<br>
திருவாவடுதுறையின்<br>
  திறம் பெற்ற சீவாளிதான்

சஞ்சிவியர் வதத்தை<br>
  சளைலிட்டு ஏந்தி வந்த<br>
ஹனுமானின் குருவிடமாய்<br>
  கூறிடலாம் அனுமன் பள்ளி<br>
கொஞ்சிக்குரல் கொடுக்கும்<br>
  சீவாளி செய்பவர்க்கு<br>
செஞ்சதோர் பாராட்டு<br>
  சிறந்த மிகப் பொருத்தமாகும்

கீதமேழுஸ்வரங்களுடன்<br>
  குலவி வாழ்ந்த<br>
நாதஸ்வர சக்கரவர்த்தி<br>
  டி. என். ஆர்.ரின்<br>
புகழ் பெற்ற ஊர் அதனின்<br>
  புகழ் பரப்பும்<br>
நடராஜ சுந்தரனார் வாழ்க!<br>
  நலமுடன் சந்ததியும்வளர்க!

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரம்பித்தார்: திடீரென்று நட்டுவனார் வெளிப்பட்டு ஜமீனை திட்ட, அவர் அங்கிருந்த பழம் நறுக்கும் கத்தியால் இவரைத் தாக்கவர நட்டுவனார் தனது கரணங்களில் ஒன்றை பிரயோகித்து அவரை மடக்கி கத்தியை பிடுங்கி வயிற்றில் சொருகினார் ஜமீன் சாய்ந்தார், அந்த இடம் தனித்த இடம் ஆதலால் யாரும் அங்கு இல்லை தூரத்தில் தான் ஜமீன் ஆட்கள் இருந்தனர். கணபதி பிள்ளை மாணவியையும் அம்மாவையும் அழைத்துக் கொண்டு இருட்டோடு இருட்டாக அடுத்த ரயில் நிலையம் சென்று காலை ரயில் வண்டிக்கு ஏறி திருப்ப ஊருக்கு சென்று விட்டார்.

காலையில், ஜமீன் பிணமாக இருந்ததைக் கண்டு உறவினர் போலீசுக்கு தகவல் தரவே தயங்கினர், காரணம் ஜமீன் திருவிளையாடல்கள் வெளியே வந்துவிடுமோ என்ற பயம். என்றாலும் போலீசார் வந்து வழக்கு பதிவு செய்து எப்படியோ நட்டுவனாரைக் கைது செய்தனர். (தொடரும்)

TN/MS(S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani, Madras-600 026, Published & Edited by M. Lakshmi, 57, South Sivan Koil Street, KODAMBAKKAM, MADRAS - 600 024,




18, 4வது பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை-28



சென்னை மாவட்ட இசை வேளாளர் சங்கம் மற்றும் முத்தமிழ்ப் பேரவை துணைத்தலைவர் மூகவை திரு M. முனியாண்டியா பிள்ளையவர்கள் மணி விழா 13-6-83 அன்று சென்னை அயன்புரத்தில் நடைபெற உள்ளது அவருக்கு நமது வாழ்த்துகள்.

## தமிழக அரசு இசைக் கல்லூரிகள்

தமிழ் நாட்டில் சென்னை திருவையாறு மதுரை முதலிய ஊர்களில் அரசினர் இசைக்கல்லூரிகள் உள்ளன. சென்னையில் மாலைநேரவகுப்பு கல்லூரிகளும் உள்ளன. ஆரம்பத்தில் இங்கு மாணவர்கள் அதிகமாக வரவில்லை. இன்றோ ஏராள மாணவர்கள் பயில வருகின்றனர். இலங்கை மலேசியா மாணவர்களும் வந்து தங்கி படிக்கின்றனர். அந்நாடுகளில் இங்கிருந்து இசைபடித்து செல்லும் மாணவர்களுக்கு நல்ல மதிப்பு. இந்த கல்லூரிகளிலே நடக்கும் வகுப்புகள் அதற்கு சேரும் விபரங்கள் !

(1) 2 ஆண்டு சங்கீத வித்வான் பட்ட படிப்பு.

(அ) S.S.L.C அல்லது அதற்கு சமமான படிப்பு.

(ஆ) ஏதேனும் ஒரு பல்கலைக் கழகத்தில் இசைத்துறையில பட்டம். டிப்ளமா அல்லது இசைத்துறையில் அதற்கு சமமாக பயிற்சி பெற்றிருக்க வேண்டும் மேற்குறித்த படிப்புக்கு சேர போதுமான அடிப்படை கல்வி தகுதியில்லாதவர்களுக்கு பிற தகுதிகள் பேரில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கைக்குள் ஒரு வருட பூர்வாங்க வகுப்பில் சேர்த்துக் கொள்ளப் படுவார்கள்.

(2) 1 ஆண்டு இசை ஆசிரியர் பயிற்சி படிப்பு—

(அ) பொதுக்கல்வி தகுதி: S. S. L. C. தேர்வு

(ஆ) இசைத்தகுதி; தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரியில் சங்கீத வித்வான் பட்டபடிப்பு அல்லது ஏதேனும் பல்கலைக்கழகத்தில் இசைத்துறையில் பட்டபடிப்பு

(3) மிருதங்கம் புல்லாங்குழல் ஆகியவற்றில் 3 ஆண்டு வாத்திய விசாரதா சர்டிபிகேட் வகுப்புகள் —

(அ) அடிப்படைகல்வி தகுதி 8-ம்வகுப்பு வரை படித்திருக்க வேண்டும்.

(ஆ) மாணவர்கள் விரும்பும் வகுப்பில் சேருவதற்கு ஓரளவு பயிற்சி பெற்றிருக்க வேண்டும்

(4) பரதநாட்டியம் 3 ஆண்டு விசாரதா சர்டிபிகேட் (பெண்கள் மட்டும்)

(5) வாய்ப்பாட்டு, வீணை, வயலின் ஆகியவற்றில் 2 ஆண்டு மாலை நேர வகுப்புகள்; இசையிலே அல்லது இசைக்கருவிகளில் உள்ள ஆர்வத்தைத்தவிர வேறு தகுதி ஏதும் தேவையில்லை வயது:- பரதநாட்டியம் மற்றும் மாலைநேரக்கல்லூரிவகுப்புகளை தவிர மற்றபடிப்பிற்கு வயது 15 வயது முதல் 35 வயது வரை இருக்க வேண்டும் பரத நாட்டியத்திற்கு 13 முதல் 30 வரையிலும் மாலை நேர வகுப்பிற்கு 16 வயது முடிந்தவராகவும், இருத்தல் வேண்டும்.

ஒவ்வொரு ஆண்டும் ஜூலை மாதத்தில் புது வகுப்புகள் தொடங்கும், ஜூன் மாதத்திலேயே விண்ணப்பம் செய்ய வேண்டும்.

கட்டணம்—

(அ) சங்கீத வித்வான் பட்டப் படிப்பு, வாத்திய விசாரதா (புல்லாங் குழல், மிருதங்கம்) மற்றும் நாட்டிய விசாரதா (பரத நாட்டியம்) கல்வி கட்டணம் ரூ.75 தனிக் கட்டணம் ரூ.32 (ஆண்டு ஒன்றுக்கு)

(ஆ) இசை ஆசிரியர் பயிற்சிக்கு கல்வி கட்டணம் ஏதும் கிடையாது தனிக் கட்டணம் ரூ.32. மட்டும் வசூலிக்கப்படும்.

(இ) மாலை நேர வகுப்புகளுக்கு மாதம் ரூ.10 விதமும், தனிக் கட்டணம் ரூ.32 ஆண்டொன்றுக்கு வசூலிக்கப்படும். பெண்கள் மட்டும் தங்குவதற்கு விடுதி வசதிகள் உண்டு.

## சீர்காழியார் உடல் நலம் தேறிவருகின்றார்

சென்ற மாதம் கடையநல்லூரில் ஓர் இசை நிகழ்ச்சி முடித்த தனது குழுவினருடன் திருச்சி திரும்புகையில் வழியில் பத்மஸ்ரீ சீர்காழி திரு. S. கோவிந்தராசன் சென்ற கார் விபத்துக்குள்ளாகி அவரும், அவரது குழுவினரும் காயமடைந்தனர் உடனே மதுரையில் சிகிச்சையளிக்கப்பட்டனர், தற்பொழுது சீர்காழியார் சென்னை இசபெல்லா மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ளார் உடல் நலமடைந்து வருகின்றார் அவரது குழுவினரும் குணமாகி வருகின்றனர்.

இந்த விபத்தினால் இலங்கை நிகழ்ச்சிகள் உட்பட பல நிகழ்ச்சிகளை ரத்து செய்தனர், விரைவில் அவர் பூரண குணமடைந்து இசை நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள இயலிசை, வேண்டிக் கொள்கின்றது.

## கங்காதீசுவரர் குடமுழுக்கு !

சென்னை புரசையில் உள்ள புராதன அருள்மிகு கங்காதீசுவரர் கோவில் ராசகோபுரம் கட்டப்பட்டு குடமுழுக்கு விழா 29-5-83 அன்று நடைபெற்றது. விழாவிற்கு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள், மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சி. அமைச்சர்கள் இந்து சமய அறநிலைய ஆணையாளர் திரு. R. சண்முகசிகாமணி ஆகியோர் வந்திருந்தனர் திருச்சேறையார் T. V. சுப்ரமணிய பிள்ளை குழுவினர் நாதசுரம் வாசித்தனர்.



சென்னை மாம்பலம் சிவா-விஷ்ணு ஆலயத்தில் சமீபத்தில் நடைபெற்ற தியாகராஜ உற்சவத்தில் தனது குழுவினருடன் சிறப்பாக வீணை வாசித்தார் வேதவல்லி கண்ணன். அவருக்கு இயலிசை வாழ்த்து!

## வேப்பங்குப்ப இறைபணி மன்ற ஆண்டு விழா

### இசைமணி சங்கரன் கச்சேரி



வேலூர் அருகில் உள்ள வேப்பங்குப்பம் கிராமத்தில் உள்ள திரு வரசித்தி விநாயகர் ஆலயத்தில் இந்து சமய இறை பணி மன்றத்தினர் தங்கள் 9ம் ஆண்டு விழாவினை 12-5-83 அன்று கொண்டாடினர். சென்னை இசைமணி M. சங்கரன் கச்சேரி செய்து கிராம மக்களை பரவசப் படுத்தினர் அவருக்கு துணையாக திருவள்ளூர் V. பார்த்தசாரதி, வயலின் C. V. குப்புசாமி மிருதங்கம் குடியாத்தம் D.C. அருணகிரி கடம் வாசித்தனர்.